பதிப்பக வெளியீடு: 6 (உலகத் தமிழ் மாநாட்டின் நினைவாக)

# தமிழ்த்தாய்த் திருப்பள்ளியெழுச்சி

(உரையுடன்)

ஆசிரியர்:
ஆ. சிவலிங்கனார்
தலைவர்,
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி,
மயிலம்.

வெளியீடு:
மாணிக்கம் பதிப்பகம்
43. முருகப்ப முதலி தெரு,
புரசைப்பாக்கம் 1967 சென்னை-7.

[விலை 75 காசுகள்

பதிப்பக வெளியீடு-6

# தமிழ்த்தாய் திருப்பள்ளியெழுச்சி

(குறிப்புரையுடன்)

ஆ. சிவலிங்கனார்
முதல்வர்
(சி. பா. சு. தமிழ்க் கல்லூரி, மயிலம்.)

(குறிப்புரை: புலவர் மாமூலன்)

மாணிக்கம் பதிப்பகம்
புரசவாக்கம் :: சென்னை-7

முதற் பதிப்பு : 1967
மாணிக்கம் பதிப்பக வெளியீடு


ஆசிரியரின் பிற நூல்கள்

சிலம்பு மணிகள்
தொல்-எழுத்து-இளம்பூரணம்
விளக்கக் கட்டுரைகள்
வள்ளுவரைப் பற்றி

விற்பனை உரிமை:
முருகன் புத்தக நிலையம்
168, திண்டுக்கல் ரோட் : : மதுரை-1

மாணிக்கம் பிரஸ், சென்னை-29.

வித்துவான், உயர்திரு ந. இராமலிங்கனூர் எம்.ஏ.,பி.ஓ.எல்.
அவர்கள் அளித்த

## அணிந்துரை

ஒரு செயலின் தொடக்கம் நன்கு அமையுமானால், அச் செயல் இடையூறின்றி இனிது நிறைவெய்தும் என்பது பொதுவானதொரு நம்பிக்கை. அதுபோல் நாளின் தொடக்கமும் நன்கு அமையப் பெறுமானால், அந்நாளில் நிகழப் போகும் எல்லா நிகழ்ச்சிகளும் துன்பமின்றி இன்பமாகவே முடியும் என்று எண்ணினர் பழந்தமிழ் மக்கள். இப் பொழுதுகூட காலையில் எழுந்தவுடன் இன்னவற்றைத் தான் பார்க்க வேண்டும், இன்னவற்றைத்தான் கேட்க வேண்டும்— இன்னவற்றைப் பார்க்கவும் கேட்கவும்கூடாது என்ற கொள்கை நிலவி வருதல் அனைவருக்கும் தெரிந் ததே. இத்தகைய எண்ணங்களுக்கு வடிவு கொடுக்கும் நிலையில் எழுந்ததே 'பள்ளியெழுச்சிப்' பாடல்கள்.

**பள்ளி எழுச்சி:**

பள்ளி என்பதற்குப் படுக்கை என்று பொருள். அது ஆகுபெயராய் உறக்கத்தை ஈண்டு உணர்த்தியது. எழுச்சி என்பதற்கு எழுப்புதல் என்று பொருள். அஃதாவது 'பள்ளியெழுச்சி' என்பது 'உறக்கத்தினின்றும் எழுப்புதல்' என்று ஆகும். பிறகு இத்தொடர் அக்கருத்துபற்றி எழுந்த பாக்களின் தொகுதிகட்கும் வழங்குவதாயிற்று.

பள்ளி எழுச்சியைக் குறித்துத் தொல்காப்பியப் புறத் திணை இயல் 'துயில் எடை நிலை' என்று பெயர் சூட்டிப் பேசுகிறது. பாடாண் திணையைப் பற்றி விளக்கும் நூற்பாவில்,

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்"

(தொல்-புறத்-36)

என்ற பகுதியே அதற்கு விளக்கந் தருவதாக அமைந்துள்ளது. "தமது வலியாலே பாசறைக்கண் ஒரு மனக்கவற்சியின்றித் துயின்ற அரசர்க்கு நல்ல புகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் அத்துயிலெடுப்பின் ஏத்தின துயிலெடை நிலையும்" என்பதே நச்சினார்க்கினியர் அப்பகுதிக்குத் தரும் விளக்கம் ஆகும். இதனால் 'பகைவரை வென்று, அந்த வெற்றிக் களிப்பில் மனநிம்மதியோடு உறங்கிக்கொண்டிருக்கும் அரசனைச் 'சூதர்' என்பவர்கள் விடியலில் சென்று துயில் எழுப்பிப் புகழ்ந்து பாடுவர்' என்ற செய்தி புலனாகின்றது. இதனையே இன்னும் சற்று விளக்கமாகப் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர்

"அடுதிறல் மன்னரை யருளிய வெழுகெனத்
தொடுகழன் மன்னனைத் துயிலெடுப் பின்று"

(பாடாண்—9)

எனக் கொளுக்கூறி, அதற்கு விளக்கமாக,

"அளந்த திறையா ரகலிடத்து மன்னர்
வளந்தரும் வேலோய் வணங்கக்—களந்தயங்கப்
பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்க ணேற்க துயில்"

என்ற வெண்பாவினையும் தந்துள்ளார்.

எனவே, அரசர் முதலிய பெரியவர்களை, நாட்காலையில் சென்று, துயில் எழுப்பிப் பாடுகின்ற வழக்கம் மிகப் பழங்காலந் தொட்டு இருந்து வருகிறது என்பதும், அவ்வாறு துயில் எழுப்புவதற்குரியார் நின்றேத்தும் தகுதியினையுடைய 'சூதர்' என்பவர்களே என்பதும் பெறப்படுகிறது.

புறநானூறு போன்ற சங்கப்பாக்களிலும், சிலப்பதிகாரத்திலும் 'பள்ளியெழுச்சி' பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன.

"வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினும் நோகோ யானே"
(புறம்—225)

என்ற புறப்பாட்டின் அடிகளும்,

"அன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை
........................................................
உரவுநீர்ப் பரப்பின் ஊர்துயி லெடுப்பி"
(சிலம்-IV-72-79)

என்ற சிலம்பின் அடிகளும் நாட்காலையில், பள்ளியெழுச்சி காலத்தில் சங்கங்களும் முரசங்களும் முறைமுறை ஆர்த்து ஊரைத் துயில் உணர்த்தும் என்ற கருத்துக்கு அரண்செய்கின்றன. இவைபோன்ற பள்ளியெழுச்சி பற்றிய கருத்துக்கள் முற்கால இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படினும் இக்கருத்துக்களையே மையமாகக்கொண்டு பாக்கள் யாத்து, அப்பாக்களின் தொகுதிக்குத் 'திருப்பள்ளி எழுச்சி' என்று முதன்முதலில் பெயர் சூட்டிய பெருமை வான்கலந்த மாணிக்க வாசகருக்கே உரியது. அவருக்குப் பிறகு, அனேக புலவர்கள் அவரை அடியொற்றி, அத்தலைப்பில் 'பள்ளியெழுச்சிப்' பாடல்கள் பல இயற்றியுள்ளனர்.

திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள இறைவனை அவனது அன்பர்கள் அதிகாலையில் சென்று, துயில் உணர்த்தும் பாங்கில் அமைந்தது மாணிக்கவாசகர் திருப்பள்ளியெழுச்சி. 'திருமால் முதலிய தேவர்கள் கையில் கரக நீருடன் காத்து நிற்கின்றனர். ஆதலால் விரைவில் பள்ளி எழுந்தருள வேண்டும்' என்று வேண்டிக்கொள்ளும் அமைப்பில் அமைந்தது 18-ம் நூற்றாண்டில் திகழ்ந்த கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாசரால், தம் ஞானாசிரியராகிய ஸ்ரீமத் சிவஞான பாலைய சுவாமிகள் மீது பாடப்பெற்ற

திருப்பள்ளி யெழுச்சி. இந்நூற்றுண்டின் தொடக்கத்தில், அடிமைத்தளையில் சிக்கித் தவித்த பாரத அன்னையை அவளது மதலையர், துயில் எழுப்பும் போக்கில் அமைந்தது பாரதியாரின் "பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி."

திரு. ஆ. சி. அவர்களின் " தமிழ்த்தாய் திருப்பள்ளி யெழுச்சி" உரையுடன் வெளிவருவது வரவேற்கத் தக்க தாகும். ஆ. சி. அவர்களின் பள்ளியெழுச்சியிலே, மாணிக்க வாசகரின் பெருமிதமும், பாரதியாரின் உணர்ச்சி வேகமும், சங்கப்பாக்களின் ஆற்றொழுக்கும் ஒருங்கு இயைந்து காணப்படுகின்றன.

" உறங்கின தமிழரும் உறக்கத்தை விடுத்தார்
உண்மையாய் உன்நிலை தனைநாளும் நினைத்தார்
மறங்கொண்டே யெழுந்தனர் மாற்றலர் தம்மை
மாய்த்திடும் நோக்கொடு மடங்கலே றென்ன
அறங்குன்று ஆண்மையோ டாண்டிட நாட்டை
அடைந்தனர்"..................................

என்ற வரிகளில் அவர் அன்று கண்ட கனவு இன்று சிறிது சிறிதாக நினைவாகி வருவதை யாவரும் அறிவோம். நல்ல இதயங்கள் விரும்பினல் அவ்விருப்பம் இன்றில்லாவிடினும், எப்பொழுதேனும் நிறைவேறியே தீரும் என்பதற்கு இஃது ஓர் சான்ருகும். இதுபோன்று தமிழ்த்தாயை முன்னிலையாம் நன்னிலைக்குக் கொணர வேண்டும் என்ற நோக்கில் எழுந்த இப்பத்துப் பாடல்களுக்கும் திரு. மாமூலன் அவர்கள் உரையுடன் வெளியிடுகிருர்கள். பயன் கருதாது, தமிழ்ப்பணி ஒன்றனையே தம் பணியாகக் கருதி இத்தொண்டினைச் செய்கிருர்கள். அவர்கட்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

**ந. இராமலிங்கம்,**
*பேராசிரியர்,*
*ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள்*
*தமிழ்க் கல்லூரி.*

மயிலம்,
20—12—1967.

# முன்னுரை

'*தமிழ்த்தாய்த் திருப்பள்ளியெழுச்சி*' என்ற தலைப்பில் வரும் பத்துப் பாடல்களும் ஒரே நேரத்தில் எழுதப்பட்டனவல்ல. அவை வந்த வரலாறே அறிஞரால் எள்ளற் பாட்டுக் குரியதாகவும் ஆகலாம்.

ஒருகால் ஓர் அன்பருடன் பேசிக்கொண்டிருந்தபோது மொழியைப் பற்றியும் பேச நேர்ந்தது. அவ்வன்பர், 'மொழி என்பது கருத்தைத் தெரிவித்துக்கொள்வதற்குரிய வாய்க்கருவிதானே; அதில் உயர்வு தாழ்வு சொல்ல என்ன இருக்கிறது; தமிழும் அப்படிப்பட்டதுதானே; இதற்காக ஏன் தமிழர்கள் போராடவேண்டும்!' என்றார். தமிழால் உயிர் வாழும் அவர் இப்படிப் பேசியதிலும் வியப்பில்லை, ஆனால் அவர் வேறொரு மொழியைப்பற்றி உயர்வாகப் பேசி அது மிகச் சிறந்த தன்மை வாய்ந்தது என்றும் குறிப்பிட்டார்.

முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதைக் குறிப்பிட்டு அந்த வேற்று மொழியும் வாய்க்கருவிதானே; அது மட்டும் எப்படி சிறந்த தன்மை வாய்ந்ததாகும் என்று கூறினேன். அவர்போலப் பலர் மறைமுகமாகத் தமிழுக்குக் கேடு சூழ்பவர் இருப்பதை இன்னும் தமிழராயினோர் முற்றுமுணரவில்லை. அவர் சென்ற பின்னர் என் மனம் அமைதி யில்லாமல் வருந்தியது. ஒரு நாளில் பின்வரும் பாடலை எழுதத் தொடங்கினேன்.

**"உறங்கின தமிழரும் உறக்கத்தை விடுத்தார்**
**உண்மையாய் உன்நிலை தனைநாளும் நினைத்தார்**
**மறங்கொண்டே யெழுந்தனர் மாற்றலர் தம்மை**
**மடித்திடும் நோக்கொடு மடங்கலே றென்ன**
**அறங்குன்று ஆண்மையோ டாண்டிட நாட்டை**
**அடைந்தனர் அகத்தெண்ணம் அன்னைநின் அருளின்"**

இந்த அளவில் எழுதியபோது ஒரு நிகழ்ச்சி நடந்தது. இது எழுதியநாள் கார்த்திகை மாத இறுதிநாள் மாலைக் காலம், மறுநாள் மார்கழி மாதம் தொடக்கம். எங்கள் மயிலம் திருக்கோயிலில் விடியற்காலத்தில் திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் இசைத்தட்டுகள் மூலம் ஒலிக்கப்படும். அதற்கு முன்னதாகவே ஒலி பெருக்கிக் கருவிகளும் பிறவும் நல்ல முறையில் இருக்கின்றனவா என்று பார்ப்பதற்காகத் திருக்கோயிலில் மாணிக்க வாசகர் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல் ஒன்று வைத்துப் பார்க்கப்பட்டது. நான் "உறங்கின தமிழரும்" என்ற பாடலை முடிக்கவேண்டிய நேரத்தில் அப்பாடல் காற்று வழி வந்தமையின் என் பாடலைப் பள்ளியெழுச்சிப் பாட லாகவே கொள்ள நினைத்து,

திறங்கண்டு வணங்கவே நின்றனர் திரளாய்ச்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே

என்ற வரிகளால் அப்பாட்டை முடித்தேன்.

மறுநாள்-மார்கழி மாதம் முதல்நாள் காலையில் எழுந்து மாணிக்கவாசகரின் திருவெம்பாவை திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களைப் பாடிய நான் முதல்நாள் மாலை நிகழ்ச்சி மனதுக்கு வரவே தமிழ்த்தாய்த் திருப்பள்ளி யெழுச்சிப் பாடல்களைப் பாடி முடிக்கலாம் என எண்ணி னேன். அவ்வெண்ணத்தின் விளைவே இந்நூல்.

முதற்பாடல் "உறங்கின தமிழரும்" என்ற பாட லாகும் என்றாலும் ஒலிபெருக்கியைச் சரிபார்த்தவர், அன்று மாணிக்க வாசகரின் "அருணனிந் திரன்திசை யணுகினன்" என்ற திருப்பள்ளி யெழுச்சிப் பாடலைப் போட்டுப் பார்த்தமையின் அப்பாடல் முதல் குறிப்பே கொண்டு "அருணனும் அணுகினன் அணிகீழைத் திசைக் கண்" என்று தொடங்கிய இரண்டாம் பாடலையே முதற் பாட்டாகக் கொண்டேன்.

*முதல் நாள் மாலையில் எழுந்த வேகம் அடுத்த நாள் காலையில் இல்லாமலும் இயற்கையோடியைந்தும் இருந்த மனநிலையில் பின் ஒன்பது பாடல்களும் அமைந்தன. எனினும் முடிவில் அவ்வேகத்தோடு கூடிய முறையான எண்ணமும் அமைந்தது.*

*இப்பாடல்கள் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 33 பரல் 11ல் வெளிவந்தன. சென்னைப் புரசைவாக்கம் மாணிக்கம் பதிப்பகத்தார் இவற்றைப் பார்த்து இவற்றுக்கு உரையெழுதி வெளியிட எண்ணி அவ்வாறே செய்தார்கள். அவர்கட்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

''விரைவிடை மிவரும் நினைப்பிற வாமை
வேண்டுநர் வேண்டுக மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொல் மலர்நினைக் கணியும்
பிறவியே வேண்டுவன் தமியேன் ''

*துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்.*

மயிலம்,
*1-1-1968*

**ஆ. சி**

# பதிப்புரை

*திருப்பள்ளி எழுச்சி என்பது படுக்கையினின்று எழுந்தருளுமாறு வேண்டுவதே ஆகும். இதில் விடியற்கால வருணனைகள் அழகுற வருணிக்கப்பட்டிருக்கும்.*

*காலை வருணனையுடன் சாத்திரக் கருத்துகளையும் பத்திச் சுவைகளையும் அமைத்துத் தெய்வங்களைத் துயில் எழுப்பிய சைவ வைணவ நூல்கள் உண்டு. அவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடப்படுபவை மணிமொழியாரது திருப்பள்ளி எழுச்சி, தொண்டரடிப்பொடியாழ்வாரது திருப்பள்ளி எழுச்சி, சிதம்பரசுவாமிகளது திருப்பள்ளி எழுச்சி, இராமலிங்க அடிகள் திருப்பள்ளி எழுச்சி என்பனவாகும். கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய திருப்பள்ளி எழுச்சியை இவற்றுடன் இணைத்துக்கொள்ளலாம்.*

*இங்கு வெளியிடப்படும்* **" தமிழ்த்தாய்த் திருப்பள்ளி எழுச்சி "** *யின் ஆசிரியர்* **உயர்திரு. ஆ. சிவலிங்கனார்** *அவர்களைத் தமிழுலகம் நன்கறியும். நூலின்கண் கற்பனைச் சுவையினையும் நகைச் சுவையினையும் காணலாம்.*

*இதனை வெளியிட அனுமதி தந்த ஆசிரியர் அவர்களுக்கும், நன்முறையில் குறிப்புரை நல்கிய புலவர்-மாமூலன் அவர்களுக்கும், அணிந்துரை நல்கிய மயிலம் சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் உயர்திரு.* **ந. இராமலிங்கம், M.A,, B.O.L.,** *அவர்களுக்கும், கண்கவர் வனப்புடன் நூல் திகழ எங்களுக்குப் பேருதவிபுரிந்த சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் விரிவுரையாளர்* **சி. பாலசுப்பிரமணியன், M.A., M.LITT.,** *அவர்களுக்கும், எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.*

*செந்தமிழ்ப் பற்றுடைய செல்வர், இலக்கியக் கலை கற்கும் இளைஞர், மாணவர், ஆசிரியர் ஆகிய எல்லாரும் கற்று இன்புறத்தக்க நூல் இது. ஆதலால் வாங்கிக் கற்றும், கற்பித்தும், ஆய்ந்தும், தமிழ்மொழியறிவு சிறந்தோங்கி நற்பெயன் பெறுக.*

*சென்னை,*
*1—12—1967.*

**மாணிக்கம் பதிப்பகத்தார்.**

# திருப்பள்ளியெழுச்சி

1\. அருணனும் அணுகினன் அணிகீழைத் திசைக்கண்
அம்மநின் முகம்போல அலர்ந்தன மரைகள்
குருகுகள் பெடையுடன் இரைதேட வெங்கும்
கூவியே பறந்தன குறையொன்று மின்றி
யிருகரம் ஏந்திய எழில்மல ருடனே
எய்தினர் அன்பரும் ஏத்திய நின்னைத்
திருமுடி மன்னர்கள் மடிதவழ்ந் திட்ட
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *தமிழ்நாட்டுத் திருமுடி மன்னர்களின் மடிகளில் தவழ்ந்து விளையாடிய செந்தமிழ்த் தாயே! சூரியனும் அழகிய கிழக்குத் திசையைச் சேர்ந்துவிட்டான்; உடனே தாமரை மலர்களும் நின் திருமுக மலர்ச்சிபோல் மலர்ந்தன; ஆண்பறவைகள் பெடைகளுடன் யாதொரு குறையுமில்லாமல் இரைதேடும்பொருட்டு நாற்புறமும் மகிழ்ச்சியால் கூவிக் கொண்டே பறந்தன; நின் அன்பர் யாவரும் தம் இரண்டு கரங்களிலும் மலர்களை ஏந்தியவர்களாய் நின்னை ஏத்த வந்து நின் பள்ளியெழுச்சியை எதிர்நோக்கியிருக்கின்றனர். ஆதலால் நீ திருப்பள்ளியினின்றும் எழுந்தருளுவாயாக.*

**(சிறப்புரை)** *அருணம்=செந்நிறம்—நெருப்பு; அருணன்=நெருப்பு மயமான சூரியன்; அஃறிணை உயர்*

திணையாகக் கூறப்பட்டது. சூரியன் கிழக்கில் தோன்றி மேற்கில் சேர்ந்தான் என்பது வழக்கு. இங்குக் கிழக்கில் சேர்ந்தான் என்பதால் சூரியன் மேற்கில் மறைந்து நகர்ந்து கொண்டே வந்து கிழக்கில் அணுகினன் என்று கொள்க. பூமியின் சுற்றும் செயல் தெரியப்படாமையின் சூரியன் செயலாகக் கூறப்பட்டது, இலக்கணை. சூரியனின் முழுத் தோற்றமும் இன்றிச் சிறிது சிறிதாகத் தோன்றும் காட்சி அழகியது, ஆதலின் அணி கீழைத் திசை எனப்பட்டது.

மரை = தாமரை; முதற்குறை. தாமரைகள் சூரிய ஒளி தோன்றுங் காலையில் மலர்வன; அவைகள் நின் முகம் போல மலர்ந்தன. எனவே தமிழ்த்தாயின் முகமும் தமிழர்களின் புகழ் ஒளி காணக்காண மலரும் என்பதாம்.

அம்மா என்பது வியப்பிடைச்சொல்; அது அம்ம என நின்றது செய்யுளாதலின். பள்ளியெழுப்பும் இக்காலத்திலும் முகம் மலர்ந்திருத்தல் வியப்புக்குரியதாகும் என்பதாம்.

குருகுகள் என்பது ஆண் குருகுகளை யுணர்த்தும், பின்னர்ப் பெடையென வருதலின். காலையில் குருகுகள் ஆர்ப்பரித்தல் இயல்பாதலின் கூவிப் பறந்தன என்றும், இரை தேடுதல் எண்ணம் ஆதலின், 'இரைதேட' என்றும், எண்ணம் தேடுவதாக இருந்தாலும் எளிதில் கிடைக்கப் பெறும் என்பதற்குக் குறையொன்றுமின்றி என்றும் கூறப்பட்டன.

இரு கரம் ஏந்திய மலர் என்பதால் அன்பர்கள் மிக்க மலர் கொண்டு வந்தனர் என்பதாம்.

ஏற்றிட என்பது ஏத்திட என வந்தது. அது உயர்த்துதல் என்பதாய் உயர்த்திப் புகழ்தலாய்—உயர்த்திப் புகழ்ந்து குறையிரத்தலாய்—குறையிரந்து வணங்குத

லாய்ப் பொருள் வளர்ச்சி பெற்றது. இன்றைய நிலையில் ஏத்திட என்பதே யியற் சொல் நிலையில் நின்றது.

திருமுடி மன்னர்கள்-சேர சோழ பாண்டியர்கள். மடி என்றது, அவர்கள் அவையை. குழந்தை தாயின் மடியில் தவழுதல் இயற்கை. செந்தமிழ்த் தாயாகிய நீ ஆடவர் களாகிய நின் குழந்தைகள் மடியில் தவழ்ந்தாய், என்னே வியப்பு! என்ற நயம் காணலாம்.

தவழ்ந்திட்ட ஒரு சொல். தவழ்ந்து+இட்ட எனப் பிரித்து தவழ்ந்து என்பதைத் தவழ எனத் திரித்து, திரு முடி மன்னர்களின் மடிகளில் தவழ்ந்து விளையாட அவர்கள் உலகுக்கு நன்மையுண்டாக நின்னை விட்டனர் எனவும் கொள்ளலாம். மூவேந்தர் அவைகளின் மூலம் தமிழ் நூல்கள் வெளி வந்தமையை உட்கொண்டு கூறுவதாம்.

2. சலசல வெனவரும் சலநிறை யாற்றில்
சலநிறை குளம்வாழும் தாமரைப் பூவில்
நலமுடன் அதையூதும் நல்லிசை வண்டில்
நாளுமவ் வண்டுறும் கோதையர் சொல்லில்
நலந்தரு மவர்குழ வியின்மழ லையில்
நன்கதைச் சிறப்பிக்கும் நற்குறள் நூலில்
நிலைபெறும் தமிழ்கண்டோம் நின்னையும் கண்டோம்
நிகழ்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே!

**(கருத்துரை):** செந்தமிழ்த் தாயே! மிக்க நீர் ஒழுகும் யாற்றிலும், குளத்திலும், தாமரைப் பூவிலும், வண்டின் இசையிலும், மகளிர் பேச்சிலும், குழந்தையின் மழலையிலும், திருக்குறளிலும் இனிமையைக் கண்டோம்; நின்னையும் கண்டோம்; பள்ளியெழுந்தருள்வாயாக.

**(சிறப்புரை):** ஜலம் என்ற சொல்லின் திரிபு சலம் என்பர். சல சல என்ற ஓசையுடன் ஓடி வருதலின் நீர்

சலம் எனப்பட்டது. இத் தமிழ்ச் சொல் வழக்கு. மிகமிக முற்காலத்தது. அது ஜலம் என வடமொழியில் ஏறிய பின்னர்த் தன் வழக்கு இழந்தது.

யாறு, குளம் முதலியவற்றில் மனதை யீர்க்கும் இயல்பு உண்மையால் அவற்றில் இனிமையுண்டு; தமிழ் என்ற சொற்கு இனிமை என்பது பொருளாதலின் அவ்விடங்களில் தமிழ் கண்டோம் என்பது கூறப்பட்டது. இனிமையுள்ள இடத்தில் தமிழ் உண்டாதலின் நின்னையும் கண்டோம் என்பது கூறப்பட்டது.

யாறும், அதன் சலம் நிறை குளமும், குளத்துத் தாமரையும், தாமரையில் ஊதும் வண்டின் இசையும், அவ்விசை போன்ற மகளிர் சொல்லும், அம்மகளிர் குழந்தைகள் மழலையும், அம் மழலையைச் சிறப்பிக்கும் "மக்கள் மெய் தீண்டல்......................." என்ற குறளும் என ஒன்றற் கொன்றுள்ள தொடர்பு காட்டியது மகிழ்ச்சிக் குரியது.

குளம் = குளத்திலும். வாழும்-அக்குளத்தில் வாழும். சலம் நிறை குளத்தில் தாமரை அழியாது நிலைத்திருக்கும் ஆதலின் வாழும் தாமரை எனப்பட்டது. யாற்றை யடுத்துக் குளம் கூறப்பட்டமையின் அந்த யாற்றின் சலம் நிறை குளம் எனக் கொள்க. யாற்றில் சலம் நிறைய வருதலின் குளம் சலம் நிறையும். குளம் நிறைதலின் தாமரை வாழும். தாமரை வாழ்ந்து மலர்தலின் வண்டுகள் ஊதும். இப்படித் தொடர்பு காண்பதும் ஓர் சிறப்பு.

நல்லிசை வண்டில் என்பதை வண்டு நல்லிசையில் என மாற்றுக. இசைக்கு நன்மையாவது கேட்டற்குரிய இனிமை. தேன் உண்ணும் செயலை ஊதுதல் என்பது மரபு. நலமுடன் ஊதுதலாவது மலர்க்கு யாதும் சிதைவு வராமல் ஊதுதல்.

கோதை-கூந்தல்; மாலையுமாம். கூந்தலில் அப்பொழு தலர்ந்த மலர் சூட்டப் பெற்றிருத்தலின் அம்மலரில் வண்டு மொய்க்கும்; மலர்மாலை என்னுமிடத்தும் அப்படியே.

கோதையர் மகளிர்; கற்புடை மகளிர். அவர்கள் சொல்லே இனிமை தருவதாம். இனிமை என்பது கேட்டற் கும் கொள்ளுதற்கும் உரியதாதலின் கற்புடை மகளிர் என் பதே சிறப்பாம்.

மழலை என்பது குறைச் சொல். சோறு என்பதைச் சோச்சி என்பது போல்வது. மழலை என்றமையால் குதலைச் சொல்லையும் கொள்ளலாம். குதலை என்பது குறைச் சொல் இன்றி மாறுபட்ட ஒலியாம். சோறு என்பதற்கு ஆ, ஊ என்பன ஒலிக் குறிப்பாம். நலம் தருதல் என்பது குழந் தைப் பருவத்தில் "மக்கள் மெய்...செவிக்கு" எனவும், வளர்ந்த காலத்தில்,

"மகன் தந்தைக் காற்றும் உதவி யிவன்தந்தை
என்னோற்றான் கொல்லென்னும் சொல்"

எனவும், வள்ளுவர் கூறியன போன்றனவாம் (தந்தைக் குரியது தாய்க்கும் ஆம் என்க.) "களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடன்" (புறம்.) எனப் பொன்முடியார் கூறியது போல நாட்டுக்குச் செய்யும் தொண்டு முதலியன வும் ஆம்.

யாறு முதலிய இடங்களில் இனிமை நிலைபெறுமாத லின் நிலைபெறும் தமிழ் எனப்பட்டது. இனிமை நிலைபெறுவ தாதலின் இனிமை வடிவான தமிழ்த்தாயும் நிலை பெறுவள் என்பதை யுணர்த்த 'நிகழ் தமிழ்த்தாய்' என்பது கூறப் பட்டது. நிகழ் தமிழ்த்தாய்-முக்காலத்தும் நிகழ்தல்-நிலைத் தல் உடைமையின் வினைத்தொகை. "என்று முள தென் தமிழ்" (கம்ப.) என்றார் கம்பர்.

3\. கண்ணனும் குழல்கொண்ட கையுடன் வந்தான்
கவின்கன்னிப் பண்ணுடன் நின்புகழ் ஊத
நண்ணுறும் நினதருள் வடிவொளி கொண்டு
நறைகமழ் தன்னிருப் பதைமலர் விக்கக்
கண்ணிய முடனந்தக் கஞ்சனும் வந்தான்
கனிமொழி யுமையையும் நின்மொழி பயிற்றத்
திண்ணிய வரனும்வந் தெய்தினன் கண்டாய்
செந்தமிழ்த் தாய் பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *செந்தமிழ்த்தாயே! திருமால் நின் புகழை ஊதிப் பயன்பெறக் கையில் குழலுடன் வந்தான்; பிரமன் தன் இருப்பிடமாகிய தாமரையை நின் வடிவொளி யால் மலர்வித்துக் கொள்ள வந்தான்; சிவபிரான் உமை யம்மைக்கு நின் மொழியைப் பழக்குவிக்க வந்தான்; இம் மூவர்க்கும் அருள் செய்யப் பள்ளி யெழுந்தருளுவாயாக.*

**(சிறப்புரை)** *கண்ணன் — பார்ப்பவர் கண்ணகத் திருக்கும் அழகன். வீதிவழிச் சென்ற இராமபிரான் தன் னைப் பார்த்த மாதரார்கண்களில் காணப்பட்டுத் தனக்கு உரிய கண்ணன் என்ற பெயர்க்குக் கண்ணில் இருப்பவன் என்ற பொருளை விளக்கினன் எனக் கம்பர் கூறுவதைக் காணலாம்.*

வீதிவாய்ச் செல்கின் றான்போல்
விழித்திமையாது நின்ற
மாதரார் கண்களூடே வாவுமான் தேரிற் செல்வான்
யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள்
உணர்த்தி விட்டான் (கம்ப)

*கிருஷ்ணன் என்பதன் திரிபாகவும் கொள்ளலாம் - **கன்னிப் பண்** - அழியாத பண்.*

*நறை-தேன்; நாற்றமுமாம். தன் இருப்பு-தான் தங்கி யிருக்கும் இடம்; அதாவது தாமரை. கஞ்சம்-தாமரை. கஞ்சத்தில் இருப்பவன் ஆதலின் பிரமன் கஞ்சன் எனப் பட்டான். தன் இருப்பு என முன்னர்த் தாமரை கூறப் பட்டமையின் கஞ்சன் என்பது காரணப் பெயராக இன்றி வாளா பெயராக நின்றது.*

*இயல்பிலேயே யுமை கனிமொழி யுடையவளாயினும் மேலும் இனிமைச் சிறப்பு வேண்டி நின்மொழி பயிற்ற அழைத்து வந்தான் என்பதாம்.*

4. தத்தம வில்லங்கள் தம்மிற்பிள் ளைகள்
தனிக்காலை வந்திடத் தாம்படிக் கின்றார்
தந்தையை வெல்லுறும் தமிழ்மொழி மாதர்
தளும்புறு நீர்க்குடத் துடன்குளம் சென்றார்
வித்தகத் தமிழரும் பாடினர் வேண்டி
விரிந்தபூம் பள்ளியின் எழுந்தருள் என்றே
எத்திறத் தோர்களும் ஏத்தினர் ஒன்றாய்
இன்றமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *செந்தமிழ்த்தாயே! பள்ளிக்கூடம் செல்லும் பிள்ளைகள் காலை நேரம் வரவே தத்தம் வீடுகளி லிருந்து பாடங்களைப் படிக்கின்றார்கள்; கிளியை வெல்லும் இனிய சொல்லுடைய மாதர்கள் நீர்க்குடங்களுடன் குளம் நோக்கிச் சென்றார்கள். அறிவுடையவர் யாவரும் நின் திருப்பள்ளியெழுச்சி பாடினர். பல்வேறு வகைப்பட்டவர் யாவரும் ஒன்று சேர்ந்து நின்னை ஏத்தினர். இவர்களைக் கண்டு திருவருள் செய்ய நீ பள்ளி யெழுந்தருள்வாய்.*

**(சிறப்புரை)** *விடியற்காலையில் பள்ளிக்கூட மாண வர்கள் தம் பாடங்களைப் படித்தல் வழக்கம். படிப்புக்குச்*

*சிறந்த நேரமாதலின் அக்காலை தனிக்காலை எனச் சிறப்பிக்கப்பெற்றது.*

*தத்தை - கிளி. தத்தையை வெல்லுதலாவது கிளியின் மொழியைத் தன் சொல்லின் இனிமையால் வெல்லுதல். தமிழ்மொழி-இனிய மொழி. தூங்கி யெழுந்தவுடன் விரைந்து குளம் நோக்கிச் செல்லுகின்றவர்கள் குடங்களில் இருந்த குறைநீரைக் கவிழ்க்காமல் எடுத்துச் செல்லுதலின் தளும்புறு நீர்க்குடம் எனப்பட்டது. குளம் என்றமையால் ஆங்காங்குள்ள யாறு, ஏரி முதலிய நீர் நிலைகளையும் கொள்க.*

*வித்தகத்தமிழர்-அறிவுடைத் தமிழர். எழுந்தருள் என்று வேண்டிப் பாடினர் என்க.*

5. விண்ணினைத் தொடவளர் வியன்மர மெல்லாம்
இன்னிசைப் புட்களின் வாயொலி யாலும்
கண்ணனின் உருக்கொளும் கடல்சேரும் யாறும்
கடுகியே சலசல வெனுமொலி யாலும்
வண்ணஞ்சேர் மலர்வாழும் வாவிகள் எல்லாம்
வளர்வாளை வண்மையாய்த் துள்ளொலி யாலும்
திண்ணமாய் அழைப்பதைச் சிறப்புடன் காணச்
செந்தமிழ்த் தாய்ப்பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *செந்தமிழ்த்தாயே விண்ணைத் தொட வளர்ந்த பெரிய மரம் எல்லாம் தம்பால் தங்கிய பறவைகளின் வாயினின்றும் எழும் இன்னிசை யொலியாலும், யாறுகள் சலசல என்னும் ஒலியாலும், மலர்க்குளங்களெல்லாம் தம்பால் உள்ள வாளைமீன்கள் துள்ளிவிழுவதால் எழும் ஒலியாலும் நின்னைத் தம்பால்வர அழைப்பதை அருளொடுகாணப் பள்ளியெழுந்தருளுவாய்.*

(சிறப்புரை) வளர்மரம் என்றமையால் வளர்ச்சி நிலையில் பல வேறுவகைப்பட்ட மரங்களையும் கொள்க. வியன்-பெரிய, புட்களின் வாய் இன்னிசை யொலியாலும் என மாறுக. கண்ணனின் உரு-கருநிறம். கண்ணனை நினைவுபடுத்தியதால் கடலும் அவன்போல உலகளித்தல் கூறப்பட்டதாம்.

வண்ணம்–நிறம். மலர்வாழும் வாவி என்றது மலர் வாழ்வதற்கிடமாக அமைந்தது வாவி என்பதாம். அதற்குக் குளம் வாழும் தாமரை என்பதற்குக் கூறியதைக் கூறிக் காண்க. வாவி-குளம். வளர் வாளை-நீண்டுவளரும் வாளை மீன். வாள்போல் இருத்தலின் வாளை எனப்பட்டது என்ன லாம். வண்மையாய்-வளப்பமாகியிருந்து. ஆழமானதும் நீர் மிக்கதுமான குளத்தில் வாளைமீன்கள் இருபது அடிக்கு மேலும் துள்ளுவதைக் காணலாம்.

சிறப்பு என்பது அருளும் எண்ணம்.

6. காலையிற் காகங்கள் கரைந்தன கண்டாய்
கன்னியர் பலருநீ ராடிய சென்றார்
சோலையிற் சென்றனர் பூக்கொண்டு வண்டார்
சுந்தரப் பொற்கொடி மாதரார் கண்டார்
ஆலையிற் றொழிலாளர் வேலைமேல் சென்றார்
ஆண்டவன் கோயிலில் மணியசைக் கின்றார்
மாலையாய் அன்பர்நின் அருள்வேண்டி நின்றார்
மாண்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே.

(கருத்துரை) மாட்சிமிக்க தமிழ்த்தாயே! விடியலில் காகங்கள் கரைந்தன. கன்னியர் நீராட வேண்டி நீர் நிலை களுக்குச் சென்றார்கள்; அழகிய பொற்கொடி போன்ற மாதர்கள் சோலைக்குச் சென்று மலர் கொய்து நல்ல மாலை

கள் தொடுத்தார்கள்; ஆலைத் தொழிலாளர் வேலைக்குச் சென்றார்கள். ஆண்டவன் கோயிலில் மணியடிக்கின்றார்கள். நின் திருமுன்னர் அன்பர்கள் வரிசையாய் நின்று நின் திருவருளை வேண்டி நின்றார்கள். அவர்களுக்கு அருள் செய்யப் பள்ளியெழுந்தருள்வாய்.

(சிறப்புரை) கரைதல்-அழைத்தல்; அது அழைத்துச் சொல்லுதல் என்ற பொருள் பெற்றது. காகங்கள் கரைந்தன என்றால் அவை விடியலில் ஒன்றையொன்று அழைத்தன என்றும், அழைத்து ஏதேதோ சொல்லிக் கொண்டன என்றும் கொள்ளலாம். கண்டாய் என்பது முன்னிலையசைச் சொல்.

கன்னியர் என்பது பின்னர் மாதரார் என வருதலின் சிறுமியரை யுணர்த்தியது. ஆடிய = ஆடவேண்டி.

சென்றனர் = சென்று. சுந்தரம் = அழகு. மாதரார் = காதலையுடைய மகளிர்; இவர் இல்லற மகளிர்.

இக்காலத்து ஆலையில் ஒரு நாளைக்கு மூன்று விடுதிகளாக (அதாவது ஒரு விடுதிக்கு எட்டுமணி நேரமாக)த் தொழிலாளர் வேலை செய்தலின் 'ஆலையிற்றொழிலாளர் வேலை மேற் சென்றார்' என்று கூறப்பட்டது. வேலை மேற் சென்றார் என்பதற்கு உள்ளிருந்தவர்கள் வேலை மேலிருந்து வெளியிற் சென்றார்கள் என்றும், வெளியிலிருந்தவர்கள் உள்ளே வேலைக்குச் சென்றார்கள் என்றும் கொள்ளலாம். முன்னதற்கு ஐந்தாம் வேற்றுமை நீங்கற் பொருளாகவும் பின்னதற்கு ஏழாம் வேற்றுமைப் பொருளாகவும் கொள்க.

மார்கழி மாதமாதலின் காலைப் பூசையோடு திருப்பள்ளி யெழுச்சிப் பூசையும் நடைபெறுதலின் ஆண்டவன்

கோயிலில் மணியடிக்கப்படும். அசைத்தல் = அடித்தல். மாலை = வரிசை.

7. வாயினாற் சொல்லவென் வாயினுக் கினிமை
வளர்காதி னாற்கேட்கக் காதினுக் கினிமை
ஆயின வொலியையும் காணநல் லினிமை
கண்ணுக்கு மாயின கவின்வடி வினையும்
ஏயினாய் நின்புகழ் எங்கணும் அடியேன்
இயம்பியே நிற்பன்காண் எனையருள் நல்ல
தாயினு மினியசெந் தண்ணளி கொண்டாய்
தண்டமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே.

(**கருத்துரை**) *நல்ல தாயினும் இனிய தண்ணருளைக் கொண்ட தமிழ் அன்னையே! சொல்ல வாயினுக்கும் கேட்கக்காதினுக்கும் இனிமையான ஒலியையும் காணக் கண்ணுக்கினிய அழகிய வடிவினையும் பொருந்தியவளே! நின் புகழை எங்கும் யான் சொல்லி நிற்பன். எனக்குத் திருவருள் செய்க.*

(**சிறப்புரை**) *தமிழ் சொல்லவும் கேட்கவும் இனிமையானது என்பதும் அதன் வரிவடிவம் (உருவம்) காண இனிமையானது என்பதும் முன்னிரண்டடிகளால் கூறப்பட்டன. பிறர்க்குச் சொல்வதைக் காட்டிலும் பிறர் சொல்லக் கேட்கும்போது இன்பம் மிகப் பெருகுதலின், அதற்குக் காரணமான காது வளர்காது எனப்பட்டது. வெளிப்படையாக வாயினாற் சொல்ல வாய்க்கு இனிமை என்றதால் வெளியில் கேட்குமாறு சொல்வதற்கு முன்னிலையவான வைகரி, மத்திமை, பைசந்தி என்ற மூன்று ஒலிகளும் உணர்வுடையார்க்கு இனிமை பயப்பன எனவும் கொள்க. ஒலியால் வரும் இனிமை என்பது உயிர் ஒலியும் வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்து ஒலிகளும்*

சொற்களிடைவரும் போதும் சொற்கள் தொடர்ப்படும் போதும் அமையும் இயற்கையொடு ஒட்டிய தோன்றல் திரிதல் கெடுதல் ஆகிய வேறு பாட்டான் வரும் ஒலி யிசையாம். கண்ணுக்கினிய வடிவம் என்றது வரி வடிவத்தை.

இயம்புதல்-சொல்லுதல். இயம்-வாத்தியம். வாத் தியம் பேரொலியுடையது. அது ஒலித்தால் அவ்வொலி நெடுந்தொலை செல்லும். அதுபோல எடுத்த ஓசையால் பலர்க்கும் கேட்குமாறு சொல்லுதல் இயம்புதல் எனப் பட்டது.

எனையருள்-எனக்கு அருள்.

நல்ல தாய்-நற்றாய். இவள் தன் குழந்தைக்குக் கால மறிந்து குழந்தை யழுவதன் முன்னதாகவே பாலூட்டு பவள். குழந்தையழுதவுடன் ஊட்டுபவள் இடைப்பட்டவள். அழுதாலும் பொறுத்துவந்து ஊட்டுபவள் கீழ்ப்பட்ட வளாவாள். யாது செய்யினும் பொறுக்கும் இயல்புடை யவள் நற்றாய் ஆதலின் அவள்போலில்லாமல் தவறு செய் யாமைக்கு ஏதுவானவற்றை யுணர்த்தியும் தவறு செய்யின் விளையும் துன்பத்தை யுணர்த்தியும் திருத்துதலின் தாயினும் தமிழ்த்தாய் இனிய தண்ணளி கொண்டாள் என்னலாம்.

8. உறங்கின தமிழரும் உறக்கத்தை விடுத்தார்
உண்மையாய் உன்நிலை தனைநாளு நினைத்தார்
மறங்கொண்டே யெழுந்தனர் மாற்றலர் தம்மை
மாய்த்திடும் நோக்கொடு மடங்கலே றென்ன
அறங்குன்று ஆண்மையொ டாண்டிட நாட்டை
அடைந்தனர் அகத்தெண்ணம் அன்னைநின் அருளின்
திறங்கண்டு வணங்கவே நின்றனர் திரளாய்ச்
செந்தமிழ்த் தாய்பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *செந்தமிழ்த் தாயே! இதுகாறும் உறங்கிய தமிழர்கள் உறக்கத்தைவிட்டு உன் நிலை என்ன என்பதை உண்மையாக நினைத்தார்கள்; நின் பகைவரை அழிக்கும் எண்ணத்துடன் சிங்கவேறுபோலச் சீற்றம் கொண்டு புறப்பட்டார்கள்; அறநெறி குன்றாத ஆண்மையுடன் நாட்டையாள மனத்து எண்ணம் கொண்டார்கள். அதற்கு நின் அருள்திறம் கண்டு வணங்கத் திரளாய்க் காத்து நின்றார்கள். (அவர்களுக்கருள் செய்யப்) பள்ளியெழுந்தருள்வாய்.*

**(சிறப்புரை)** *வந்த வேற்று மொழிகளுக்கு இடம் கொடுத்து அவற்றைப் போற்றிப் புரந்தமையால் சொந்த மொழிக்கு இடையூறு நேர்ந்ததை யறியாதிருந்த தமிழர்கள் இன்று உணர்ந்து கொண்டனர் என்பதும், நாட்டை யாண்டவர்கள் இன்று பிறரால் ஆளப்படும் கீழ்நிலையை யுணர்ந்து தாமே யாளவேண்டும் என்று எண்ணினர் என்பதும் இக் காலநிலையை யுணர்த்தும்.*

*நிலை-அரியணை யிழந்திருந்த நிலை. மறம்-வீரம், சீற்றம். மாற்றலர்-பகைவர், அவர் தமிழ்க்குக் கேடுவரும் வகையில் பிற மொழிகளைத் திணிப்பவர். மடங்கல் ஏறு-சிங்கவேறு. அறம் குன்றா ஆண்மை-அறநெறி குறைவுபடாது செய்யும் ஆண்மை. அகத்து எண்ணம் அடைந்தனர் என்க.*

9. தமிழர்கள் தம்முளத் தனியிருள் நீங்கத்
தனிச் சிந்தா மணிதனைத் தகுதியிற் கொண்டே
தமிழரை வென்றிடத் தங்கிடும் பகையைத்
தங்காமல் ஓட்டிடச் சிலம்பொலி கொண்டே
தமிழர்க்கும் தமிழர்கள் அல்லாத பேர்க்கும்
தகுமுறை யதுபொய்யா மொழியதும் கொண்டே
தமிழனை யெம்முடை யுயிரனை நீயும்
தண்ணருளுடன் பள்ளி யெழுந்தரு ளாயே.

**(கருத்துரை)** *தமிழன்னையே! எங்கள் உயிரான அன்னையே! தமிழர்கள் உள்ளத்தில் உள்ள அறியாமையாகிய இருள் நீங்குமாறு சிந்தாமணியையும், தமிழரை வெல்ல எண்ணியிருக்கும் படையை ஓட்டச் சிலம்பொலியும், யாவர்க்கும் பொய்யா மொழியையும் கொண்டு நீ பள்ளியெழுந்தருளுவாயாக.*

**(சிறப்புரை)** *இருள் பொருளைக் காட்டாதாயினும் அமைதியாக இருப்பவரைத் தீங்கு செய்வதில்லை; ஆனல் அறியாமையானது பிற நல்ல பொருளைக் காட்டாமையோடு அதனையுடையாரையும் அழித்தலின் தனியிருள் எனப்பட்டது. சிந்தாமணி திருத்தக்க தேவரால் இயற்றப்பட்ட நூல். இருட்டை நீக்க மணி கொண்டு வந்ததாகக் கூறப்பட்டது.*

*பகை தமிழுக்கு மாருக எண்ணும் பிறமொழியாளர் கோட்பாடு. போர்க்களத்து எழுப்பும் ஒலி கேட்டுப் பகைவர் ஒடுங்குவர். ஆதலின் பகைக்குச் சிலம்பொலி கொண்டதாகக் கூறப்பட்டது. சிலம்பு = இளங்கோவடிகளால் இயற்றப்பட்ட சிலப்பதிகாரம்.*

*பொய்யா மொழி = வாய்மையானதும் மெய்ம்மையானதும் உண்மையானதுமான மொழி. அது திருக்குறள். அந்நூல் யாவர்க்கும் உரியது. உலகப் பொதுமறை நூல். அதனையியற்றிய திருவள்ளுவரை உலகுக்குத் தந்து வான்புகழ் கொண்டது தமிழ்நாடு என்ருர் பாரதியார்.*

**''வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து**
**வான்புகழ் கொண்ட தமிழ்நாடு''**

10. தண்டமிழ் நாட்டினின் தனிவளம் ஓங்கத்
தமிழ்க்கவி திசையெட்டும் தனித்துமு ழங்க
ஒண்டொடி யார்களின் ஒண்ணிறை யோங்க
உத்தம ரென்றென்றும் உரையுடன் தங்க
மண்டிய பிணிகளும் மாயமாய் நீங்க
மாமழை தாழாது பெய்யவே யெங்கள்
திண்டிறற் பகைகளும் தீரவே துங்கச்
செந்தமிழ்த் தாய்ப்பள்ளி யெழுந்தரு ளாயே.

(**கருத்துரை**) *செந்தமிழ்த் தாயே! தமிழ்நாட்டில் சிறந்த வளங்கள் மிகவும், தமிழ்க்கவிகள் திக்கெங்கும் முழங்கவும், மகளிர்களின் கற்புச் சிறக்கவும், உத்தமர்கள் புகழுடன் நிலைக்கவும், பிணிகள் நீங்கவும், மழை தவறாது பெய்யவும், பகைகள் நீங்கவும் பள்ளியெழுந்தருளுவாயாக.*

(**சிறப்புரை**) *'நாடென்ப நாடா வளத்தன' என வள்ளுவர் கூறியாங்கு உள்ள வளம் என்பதற்குத் தனி வளம் என்று கூறப்பட்டது. ஓங்குதல்-மிகுதல்.*

*தனித்து முழங்குதலாவது மற்றைய மொழிக்கவிகள் கீழ்ப்படுமாறு சொற்பொருள் வளங்களுடன் முழங்குதல்.*

*ஒள் நிறை-அழகிய நிறை, கற்பு. ஓங்குதல்-சிறத்தல். உரை-புகழ். தங்குதல்-பெயர் நிலைத்தல். தாழாது-காலம் தாழ்க்காமல், தவறாமல். துங்கம்-தூய்மை.*

# மதிப்புரைகள்

## சிலம்பு மணிகள்

'சூழ்வினை சிலம்பு காரணமாக' முதனூலுக்குப் பெயர் அமைத்தது போல் அதன் ஆய்வு விளக்க நூலாகிய இதற்கு அதன் உள்ளீடு காழ்மணி காரணமாகச் "சிலம்பு மணிகள்" என்னும் பெயர் எவ்வாற்றானும் ஒவ்வும்.

அந்நூலைக் கற்றுப் பயன் கொள்ளப் பயில்வார்க்கும், பயின்று பிழிவாய் உளத்தமைக்கக் கருதுவார்க்கும் இந்நூல் பெரிதும் துணையாகும். பயிலப் பயிலப் போவார்க்கும் ஊக்கமூட்டும் தன்மைத்து. ஆசிரியரவர்கள் பல காலமாகப் பல சிறந்த வெளியீடுகளில் எழுதி வந்துள்ள கட்டுரைகளின் தொகுதியாதலால் தடையும், விடையும், ஆய்வும், துணிவும் பொதுளிய தெளிநூலாகத் திகழ்கின்றது இது.

இதன் கண் கதைச் சுருக்கமும், "மாதவி முதல் இளங்கோவடிகள் சமயம்" என்பதீறாகப் பதினெட்டுத் தலைப்புக்களில் பல மேற்கோள்களுடன் கதைத் தொடர்புங் கொண்டு சிறந்த ஆய்வு விளக்கம் நிலவுகின்றது. எளிய இனிய நடை, அழகிய பதிப்பு.

இதனை ஆய்வாளர்களும், மாணவர்களும், ஆசிரியர்களும், செந்தமிழ் அன்பர்களும் வாங்கிப் பயன் எய்துவார்களாக. இதனை வாங்கும் வாயிலாக ஆசிரியரவர்களின் நுண்ணாய்வு நூல்கள் பல வெளிவரத் துணைபுரியும் சீரிய செய்கை செய்தவருமாவர்.

'செந்தமிழ்ச் செல்வி'
ஜனவரி 1964

X X X

சிலப்பதிகாரக் காவியமே ஒரு சிலம்பென்றால் அந்தக் காவியத்தினுள் ஊடாடும் கதாபாத்திரங்கள் சிலம்புக்குள்ளே சிலம்பும் மணிகளாகின்றனர். அத்தகைய கதா

பாத்திரங்களின் குண விசேஷத்தை இலக்கிய ரீதியில் ஆராய முற்பட்டுக் கூடுமான வரை வெற்றி பெற்றிருக்கிறார் இந்த நூலின் ஆசிரியர். மாதவியைப் பற்றிய முதல் கட்டுரையில், மாதவி, அவள் வேறொருவன்பால் விருப்புடையவள் போல் பாடியது குலமகள் செய்யக்கூடிய காரியம் அல்ல, காமக்கழி கலஞக இருந்த கணிகை சித்திராபதியின் மகளானதால்தான் மாதவி அப்படிப் பாடினாள் என்று ஆசிரியர் எடுத்துக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. கண்ணகி என்ற பெயரின் காரணத்தை ஆராயும் கட்டுரையில் மு. ராகவ அய்யங்காரின் 'கர்ணிகா'வின் திரிபே கண்ணகி என்ற கருத்தோடு மாறுபட்டு, அதற்கு ஆசிரியர் காட்டும் ஆதாரங்கள் சிறப்பாக இருக்கின்றன.

இளங்கோவடிகளின் சமயம் யாது என ஆராயும் கட்டுரையைத் திறம்பட எழுதியிருக்கிறார் ஆசிரியர்.

சிலப்பதிகாரத்தில் வரும் தேவந்தி, மாதரி, மாடலன், வசந்தமாலை போன்ற சிறு பாத்திரங்களைப் பற்றிய கட்டுரைகள் ரசமாக எழுதப்பட்டுள்ளன.

சுதேசமித்திரன், 18-2-64

X X X

சிலப்பதிகாரத்தில் வரும் பாத்திரங்கள் சிலவற்றின் பண்பு நலங்களை விரித்து விளக்கப்பெற்ற கட்டுரைகளும், இளங்கோவடிகளின் சமயம், கண்ணகி பெயர்க் காரணம் முதலிய ஆராய்ச்சிக் கட்டுரைகளும் அமைந்த அழகிய நூல் சிலம்பு மணி.

ஆசிரியர் அவர்கள் பலகாலும் தம் மனத்தில் ஆய்ந்து கண்ட கருத்துக்களைத் தெளிவாகவும் காரண காரியத் தொடர்போடும் இக்கட்டுரைகளில் விளக்கியுள்ளமை பாராட்டத்தக்கது. இனிய எளிய அழகிய ஆற்றொழுக்கான நடையில் இலக்கிய இன்பம் செறிய எழுதப்பட்ட இக் கட்டுரைகள் கல்லூரி மாணவர்கள் பாடமாக படித்து நலம்பெறுதற்கு ஏற்றன.

ஆசிரியர் அவர்கள் சிலப்பதிகாரக் காவியத்தில் துணைப் பாத்திரங்களாக வந்துள்ள பலருடைய அரும் பண்புகளைப் படப்பிடிப்புப் போல எழுதி விளக்கியுள்ளமை அப்பாத்திரங்களின் உயர்வை விளக்குவதோடு அக் காவியத்தை முழுவதும் முறையாகக் கற்க வேண்டும் என்ற உணர்ச்சியைத் தூண்டும் மிகவும் நல்ல முயற்சி யாகும்.

ஆசிரியர் அவர்கள் மேலும் தொடர்ந்து இத்தகைய அரிய நூல்களைத் தமிழகத்துக்கு மேலும் அளிக்க வேண்டும் என்பது எங்கள் வேண்டுகோள்.

நித்திலக்குவியல், மார்ச் 1964

X X X

ஒல்காப் புகழ் சிலப்பதிகாரத்தின் தொல் காவியத்தின் விளக்கவுரைக் கோவைகளில் இதுவும் ஒன்று. ஆசிரியர் பல பத்திரிகைகளில் எழுதிய சிலம்பு ஆராய்ச்சிக் கட்டுரை களின் தொகுப்பு இந்த நூலாகும்.

சிலப்பதிகாரத்தில் வரும் உறுப்பினரான மாதவி, தேவந்தி, கவுந்தியடிகள், வசந்தமாலை போன்றவர்களின் இயல்புகள், இளங்கோவடிகளின் சமய நெறி, கண்ணகியின் பெயர்க் காரணம் ஆகியன விளக்கப்படுகின்றன.

இலக்கியத்தில் வரும் நவமணிகளை இவ்விதம் தனித்து மதிப்பிட்டு சிறப்பை எடுத்துக்காட்டுவது சிறந்த தோர் அம்சமாகும்.

தமிழ்ப் பயிற்சியாளர்களுக்கும் இலக்கிய நுட்ப ஆராய்ச்சியாளர்களுக்கும் இது சிறந்ததோர் கை ஏடாக விளங்குகிறது.

நவ இந்தியா 17-11-63

X X X

சிலப்பதிகாரத்தின் பெருமையை ஆராய்ச்சிக் கட்டுரை கள் மூலம் இந்நூல் நன்கு விளக்குகிறது.

இந்நூலில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள பல நுட்பமான கருத்துக்கள் ஆசிரியரின் ஆராய்ச்சித் திறனைக் காட்டுகிறது.

சிலப்பதிகாரத்தின் பெருமணிகளான கண்ணகி, மாதவி முதலியோரின் பண்புகளைத் தவிர, சிறு மணிகளாகிய வசந்தமாலை, தேவந்தி, மாதரி போன்றவர்களின் பண்புகளையும் இந்நூலாசிரியர் துணிந்து ஆராய்ந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ்நாடு, 14-11-67

X X X

இந்நூலில் பிரதான பாத்திரங்களும், மற்றவர்களும் அளவிடப்படுகின்றன. இந்நூலில் மாதவி, தேவந்தி, கவுந்தியடிகள், வசந்தமாலை, மாடலன், மாங்காட்டு மறையவன், பொற்கொல்லன் முதலியவர்கள் கையாளப்படுகின்றனர்.

கண்ணகி என்ற சொல்லுக்கு மூல ஆராய்ச்சி செய்து, கண்ணகி என்ற சொல்லின் பெண்பால் என்றும் குறிப்பிட்டிருப்பது ஒரு புது ஆராய்ச்சி.

தினமணி-17-11-67

X X X

**" இளம்பூரணர் எழுத்துரை "**

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனுர் இயற்றிய தொல்காப்பியமென்னும் இயல் நூலுக்கு ஆசிரியர் இளம்பூரணர் முதன் முதலாக அரிய பெரிய உரை கண்டுள்ளனர். அவ்வுரை அன்று தொட்டு இன்றுகாறும் நூல் வடிவிலும், பயிற்சியிலும் இருந்து வருகின்றது.

இக்காலத்து அவ்வுரையினைப் பயிலும்-மாணவர்க்கும் பயிற்றும் ஆசிரியர்க்கும் இடையிடையே நிகழும் ஐயங்களை அகற்றவும், திருத்தப்பாடங் கொள்ளவும், விளக்கமும் தெளி

வும் பெறவும் கருவி நூலொன்று இன்றியமையாததாகும். அதற்குரிய சிறந்த நூலாக இது திகழ்கின்றது.

இதன் ஆசிரியர் பன்னெடுங்காலமாகத் தொடர்ந்து புலமை வகுப்புப் பாடம் நடத்தி வருகின்றனர். அவ்வக் காலத்து மாணவர்கட்கு உளங்கொளத் தெளிவுபடுத்தி விளக்கிய குறிப்புக்களை யெல்லாந் தொகுத்து நிரல்பட யாத்துள்ளனர். இதன்கண், கருவியும் செய்கையும் 'முதலாக' அருஞ்சொற்பொருள் முடிவாகப் பதின்மூன்று தலைப்புக்கள் காணப்படுகின்றன. இனிய எளிய நடையும் வாய்ந்தது. அழகிய பதிப்பு.

செந்தமிழன்பர்களும், ஆய்வாளர்களும், மாணவ ஆசிரியர்களும் வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப் பயன் எய்துவார்களாக.

செந்தமிழ்ச் செல்வி, ஜுன் 1967

X X X

ஏறக்குறைய இருபதாண்டுகளுக்குமேல் வித்துவான் மாணவர்களுக்குக் கற்பிக்கும் வாய்ப்புற்ற இவ்வாசிரியர் இளம்பூரணருரையில் எங்கெங்கு எவ்வெவ்விடர்கள் காணப்படுகின்றன என்பவற்றை நுணித்தறிந்து அவற்றினை இவ்வுரைமூலம் களைந்தது மிக மகிழ்ச்சிக்குரியதாம். இவ்வாசிரியர் கூறிச்செல்லும் நுண்குறிப்புக்கள் யாவும் போற்றத்தக்கன. யாவரும் வாங்கிப் படித்துப் பயன்பெறுவார்களாக.

சித்தாந்தம், டிசம்பர் 67

X X X

14 பகுதிகள் உள்ளன. முதற்பகுதியான வரலாற்றுப் பகுதியில் இளம்பூரணரைச் சமயம் அறியப்படா சான்றோர் என்று கூறியிருப்பது ஆராய்ச்சித் திறனை அறிவிக்கிறது. கிடைத்திருக்கும் ஆதாரங்கள் ஒரு தலையான முடிவிற்கு இடம் தரவில்லை யென்பதே ஆராய்ச்சியின் பொருள்.

அதுவே நடுநிலைமையும் ஆகும். இளம்பூரணரும் மணக்குடவரும் பண்டாரத்தார் நோக்கத்தின்படி ஒருவரா அல்லது வெவ்வேறு புலவர்களா என்ற ஆராய்ச்சியையும் சான்றில்லாமல் ஒப்புக்கொள்ள முடியவில்லை என்று கூறியிருப்பதும் நடுநிலைமை ஆகும்.

**தினமணி, 14-11-67**

X X X

இளம்பூரணர் உரைக்கு அரியமுறையில் விளக்கம் தந்துள்ளார் பேராசிரியர் சிவலிங்கனார்.

இவ்விளக்கங்கள் கட்டுரைகளாகவும் குறிப்புகளாகவும் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளன.

தமிழ் ஆராய்ச்சியாளர்க்கும், ஆசிரியர்க்கும் சிறப்புத் தமிழ் கற்கும் மாணவர்க்கும் இந்நூல் இன்றியமையாததாகும்.

தமிழ்நாடு, **14-11-67**

X X X

**உண்மை விளக்கம்**

மெய்கண்ட தேவரின் மாணாக்கருள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங் கடந்தாரால் செய்யப்பட்ட இந்நூலுக்குத் தொண்டை மண்டலம், காஞ்சிபுரம், ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரால் செய்த உரையுடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

மூலநூலுக்குச் சில உரைகள் இருந்த போதிலும், விரிவுரையின் நோக்கம் பொருளை நன்கு விளக்குவதாகும். பல அரிய குறிப்புக்கள் அடங்கிய உண்மை விளக்கம் என்னும் நூலை நன்கு பயில்பவர். சிவஞான சித்தியார், சிவஞான போதம் முதலான சித்தாந்த நூல்களுக்குப் பொருள் விளக்குவது எளிதாகும். 54 பாக்களுடன் கூடியதும் 55-

வது அபியுக்தர் வாக்காக ஒரு பாட்டுடனும் உரை, உரை விளக்கமும் கொண்டது.

தினமணி, 14-11-67

X X X

உரையாசிரியர் தவப்பெரும் அடிகளார் திருவருட் செல்வத்துடன் புலமை நுட்பத்திருவும் நனிமிகப் பொருந்திய நற்றவ நல்லார். நூலும் செய்யுளும் நுணுக்கமா யுணர்த்தும் நோன்மையர். இவ்வுரைமாண்பு எல்லாப் பாடலிலும் காணப்படுதலின் ஒன்றிரண்டு எடுத்துக்காட்டி அமைவதற்கில்லை. இவர்கள் வாயிலாகத் திருமுறை மெய் கண்ட நூல்களுக்குப் பேருரை (பாடியம்) வரவேண்டு மென்று நாம் வேண்டிக்கொள்வோமாக. பதிப்பகத்தாரின் நற்றொண்டைப் பாராட்டுவோமாக. செந்தமிழன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும் ஓதி யுணர்ந்து உறுபயன் எய்துவார்களாக.

செந்தமிழ்ச் செல்வி, டிசம்பர் 1967

X X X

இந்நூலின் உரையாசிரியர் காஞ்சிபுரம் தொண்டை மண்டலாதீன குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆவார்கள். இதற்குமுன் யான் கண்ட பல உரைகளிலும் விளக்கந்தரும் நிலையில் இது தலையிடத்தைப் பெற்று மிளிர்கின்றது எனக் கூறலாம். எங்கு ஐயம் நிகழ்கிறதோ அங்கு நன்முறையில் சுவாமிகள் விளக்கம் காட்டியருளியிருக்கிறார்கள். பல மேற்கோள் களுடன் பண்டைச் சான்றோர் உரையை ஒத்து இவ்வுரை நூலும் உள்ளது. இக்காலத்து இவ்வாறு உரை எழுது வோர் மிகஅரியர். இதனைப் போன்ற சுவாமிகள் மூலம் நம் சாத்திர நூல்கள் பலவற்றிற்கும் நல்லுரைகளை இப் பதிப் பகத்தார் வெளியிட வேண்டுகின்றோம். யாவரும் வாங்கிப் படித்துச் சமய அறிவு மேம்பட்டிலங்குவார்களாக.

சித்தாந்தம், டிசம்பர் 1967

## மாணிக்கம் பதிப்பகத்தாரின் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | விநாயகர் துதி நூல் | 0·25 |
| 2. | சிலம்பு மணிகள் | 0·25 |
| 3. | தொல்-எழுத்து இளம்பூரணம் விளக்கக் கட்டுரைகள் | 3·00 |
| 4. | உண்மை விளக்கம் (ஸ்ரீலஸ்ரீ ஞானப் பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் காஞ்சிபுரம்) | 2·75 |
| 5. | வள்ளுவரைப் பற்றி வரிசை 1 | 1·75 |



விற்பனை உரிமை

முருகன் புத்தக நிலையம்

168, திண்டுக்கல் ரோட்

மதுரை - 1.